# அருள்மிகு குருவாயூரப்பன் மாலை



இயற்றியவர்

அ. கண்ணப்பன்

# அருள்மிகு குருவாயூரப்பன் மாலை

இயற்றியவர்

அ.கண்ணப்பன்

வெளியீடு

**திரு. R.வெங்கட்டராமன்**

**TNEB - Retd**

**திருமதி. சந்திராவெங்கட்டராமன்**

**திரு. G. முத்துகிருஷ்ணன்-திருமதி. ராஜு முத்துகிருஷ்ணன்**

**செல்வன். M. சூர்ய நாராயணன்**

**திரு.V.ஸ்ரீநிவாசன்-திருமதி.கலாஸ்ரீநிவாசன்**

**செல்வன்.S.நரேந்திரன்; செல்வி.S.ஸ்வரூபினி**

**திரு.V.ராஜகோபாலன்-திருமதி. அனுராதா ராஜகோபாலன்**

**செல்வி.R.ராஜ ஹம்ஸா ; செல்வி.R.மதுர மாயா**

**Flat-F,** பாக்மர் ப்ளாட்ஸ்

புது எண்: 38,8வது தெரு விஸ்தரிப்பு

நியூகாலனி,ஆதம்பாக்கம்

சென்னை-600088.

ஏப்ரல் 2015

# முன்னுரை

குருவாயூரப்பன் மாலை என்னும் இந்நூலில் அருள்மிகு குருவாயூரப்பன் திருவடிகளுக்கு அணிவிக்கப்பெறும் பன்னிருசீர்விருத்தப் பாடல்கள் 26 உள்ளன. இதனைத் தொடர்ந்து குருவாயூர் பற்றிய செய்திகள் உரைநடையில் கொடுக்கப்பட்டுள்ளன.இந்நூலின் முதற்பதிப்பு ஜனவரி 1990ல் வெளியிடப்பட்டது. தற்போது இரண்டாம் பதிப்பு வெளியிடப்படுகிறது.

குருவாயூரில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் புன்சிரிப்பு விளங்க பக்தர்களுக்கு அருள்புரிகிறார். இவர் தரிசனம் நாம் பெறும் பேறு ஆகும். ஒப்பல்லாத மகத்துவம் உடையவர்.இவர் கருணைக்கடல்; கண்கண்ட தெய்வம். இவரை விராட் புருஷனாக வழிபட்டார் ஸ்ரீ நாராயண பட்டதிரி. இவர் சங்கு, சக்கரம், கதை பத்மத்துடன் எழுந்தருளிக் காட்சி தருகிறார். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்று விசேஷங்களையும் உடையது குருவாயூர்.

இந்நூலுக்கு பேராசிரியர் முனைவர் ம.பெ.சீனிவாசன் அவர்கள் சிறப்பான அணிந்துரை வழங்கியுள்ளார்கள்.திரு.R.வெங்கட்டராமன் அவர்களின் குடும்பத்தார் இந்நூலை அச்சிட்டு வழங்குகின்றார்கள்.இவர் களுக்கு எனது நன்றியைச் செலுத்துகின்றேன்.

கும்பகோணம் — அன்பன்,

12-3-2013 — அ.கண்ணப்பன்

## பேராசிரியர் முனைவர் ம.பெ.சீனிவாசன்
## சிவகங்கை.

பக்திநிலையில் பிறக்கும் பரவசத்தைப் *பண்டை வசம் போய்ப் பரவசமாய்* என்று பேசுகிறது குட்டித்திருவாசகம். அத்தகைய பரவச நிலையைத்தான், கோல மிகு சொற்களைக் குழைத்துப் பாடுகிறது இவ்வருள் நூல்.

கழிநெடிலடிகளாகிய பன்னிருசீர்ஆசிரிய விருத்தங்கள் 26 கொண்ட அளவிற்சிறிய நூல் இது. ஆயினும் பாடுபொருளால் பெருமை உடையது. பெருநூல் பல கற்பதால் விளையும் பெரும் பயனை இவ்வொரு நூல்-தானே தரவல்லது.

வைணவ மரபில் மலைநாடு என்று வழங்கப்படும் கேரளத்தில் - குருவாயூரில் கோயில் கொண்டிருக்கும் அப்பனைச் சிற்றாயனைக் குலவிக் கொண்டாடுகிறது இந்நூல்.

*என்னப்பன்...எனக்குப்..*
*பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன்*
*தன்னொப்பார் இல்லப்பன்*

என்று திருவிண்ணகர் ஒப்பிலியப்பனை- *அப்பன், அப்பன்* என்றே வாய்மணக்கப் பேசும் வண்சடகோபரை ( நம்மாழ்வாரைப் ) போலவே, இவ்வருட்கவிஞர் பேராசிரியர் அ.கண்ணப்பனாரும் குருவாயூரப்பனை முன்னிலைப் பரவலாய்த் துதிக்கிறார். பாடல் தோறும் அருள்-

*நல்குங் குருவாயூரப்பா*
*நாரா யணனே, நாயகனே !*

என்று மகுடமிட்டு இசைக்கிறார். கண்ணீர்ப் பெருக்குடன் விளிக்கிறார்.

மத்தக்களிற்றுடை வசுதேவர்க்கும் அவர்தம் சித்தம் பிரியாத தேவகிப் பிராட்டிக்கும் அவர்கள் விரும்பியவாறு ஒரு மகனாகப் பிறந்த திருமாலே குருவாயூர்க் கண்ணனாக - அத்தலத்தில் காட்சி தரும் அழகினை - அடியார்களுக்கு அருளமுத வாரியை வாரி வழங்கும் சிறப்பினைப் பாடல்தோறும் அமைத்துப் பாடுகிறார் கவிஞர். நம் பக்தி மரபில் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றும் முதன்மையானவை. அதனைத் தழுவிக் குருவாயூர்த் தலச்சிறப்பும் வரலாறும்,அங்கு நிகழ்த்தப்பெறும் பூசனை முறைகளும் புராணக் கதைகளும் பாடல் தோறும் அமையக் கவித்துவச் செறிவுடன் பாடப்பட்டிருப்பது இந்நூலின் சிறப்பு. மேலும் அக்கோயில் வழிபாட்டு முறைகளையும் நெறிகளையும் அங்குள்ள வழக்காற்று மொழியிலேயே சொல்லியிருப்பது, அச்சிறப்புக்குக் கூடுதல் சிறப்புச் சேர்ப்பதாக அமைகிறது.

குருவாயூரப்பனிடத்து மாளாக் காதல்கொண்ட தமிழகத்து அடியவர்களும்-மலைநாட்டு மண்ணின் வாசனையோடு முறைபிறழாது வழிபடுதற்கும் துதிப்பதற்கும் ஏற்றவாறு, அருள்மிகு குருவாயூரப்பன் மாலை அமைந்திருக்கும் அழகை எண்ணி வியக்காமல் இருக்க முடியவில்லை. *சீவேலி,திருப்பூந்தானம்,துலாபாரம்,அடிமைகிடத்தல், நடைதள்ளல், ஆனைஇருத்தல், மேற்சாந்தி* - முதலான மலைநாட்டுக்குரிய கோயில் வழிபாட்டுக் கலைச்சொற்களைப் பூக்களாகக் கொண்டு இவ்வருள்மாலையைக் கவிஞர் தொடுத்திருக்கும் அழகு, கற்போர் நெஞ்சில் மணக்கவே செய்யும்.

நூலின் முடிவில் பாடல்களுக்கிடையே சொல்லப்பட்ட புராணச் செய்திகள் முதலியவற்றிற்கு அவர் தந்திருக்கும் விளக்கம் மிகவும் பயன்விளைப்பதாகும். சற்றேறக்குறைய பன்னிரு பக்கங்களில் தரப்பட்டுள்ள அவ்விளக்கம், குருவாயூர் சென்று தரிசிப்பது எந்த நாளோ? என்ற ஏக்கத்தைப் பிறப்பிப்பதோடு, முன்னரே சென்று கண்டார்க்கும் இனி மீண்டும் சென்று, ஒவ்வோர் இடமாக நின்று நின்று காண்பது எப்போதோ? என்ற நினைப்பையும் உருவாக்கும். கற்போரைக் கைப்பிடித்து அழைத்துச் சென்று காட்டுவதுபோன்ற விளக்கக்குறிப்புகள் அவை. உரை நடையிலான ஆற்றுப்படையாகவும் அதைப்போற்றலாம்.

நிறைவாக ஒன்று. இவர்தம் பாடல்கள் முன்னைய அருளாளர்களின் பக்தி நெறித் தடத்திலேயே செல்லுவதும்-பழகு தமிழில் கற்போர் மனம் பதியச் சொல்லுவதுமான தனிச்சிறப்புடையவை.

ஒரு சோற்றுப் பதமான சான்று இதோ! *அவனருளாலே அவன்தாள் வணங்கி* என்பது மணிவாசகம்.

*நின் பாத பங்கயம் நிரந்தரம் நினைப்பதாக*

*நீ நினைக்க வேண்டுமே*

என்பது திருமழிசைப் பிரானின் *திருச்சந்தவிருத்தம்*. அவனை நினைப்பதற்கும் அவனருளே வேண்டும்; அஃது இன்றேல் அவனை நாம் அணுக இயலாது.அவன் சேயனாவான் என்பது முன்னோர் முடிவு. அந்த முன்னோர்களின் நெறி பற்றியே

*நாரா யண! ஓம் நம என்று*

*நாட எனக்குன் அருள்காட்டாய்*

என்று குருவாயூரப்பனைப் பரவுகின்றார் நம் அருட்கவிஞர். அவன் திறத்துக் காட்டும் பக்திக்கும் அவனருளையே வேட்டுநிற்கிறார் இவர். நூல் தொடங்கும் நிலையிலேயே ஆசிரியரின் வேண்டுதல் இவ்வாறு அமைகிறது.

நல்ல தொடக்கம்!

நூல் முழுக்கவே சீரான - நல்ல கவிதை ஓட்டம்!

இந்நூலை ஒருமுறை பயில்வாருக்கும் இறையருளில் நாட்டம் பிறக்கும் என்பது உறுதி. முன்னரே அருட்கடலில் மூழ்கித் திளைப்பவர்க்கோமேன்மேலும் இறைக்காதல் சுரக்கும்; ஊற்றெடுக்கும்.

ஆசிரியரின் மொழியிலேயே சொன்னால் இந்நூற் கல்வி,

ஈனந் தொடர் சம்சார பந்தம்
ஏகுவிக்கும் முத்திதரும்
எல்லாத் துரிதம் நோய் நீக்கும்
ஈடில் காட்சி வரங்கிட்டும்
ஊனந் தகர்க்கும் மங்களமாம்
உடன் நம் விருப்பம் நிறைவேறும்
உறும் இக் கலியின் கொடுமையறும்
உதவுங் கைவல்லியம் மேலாம்...
ஞாலம்அளிக்கும்வழிபாட்டு
நலங்கள்சேர்க்கும்.. (பாடல் 16)

என்பது உறுதி. பிறவித் துயரில் விழுந்து தடுமாறும் ஆவிக்கு-ஒரு பற்றுக் கொம்பாய் உள்ளவனைப் பற்றிக் கொள்ளுமாறு செய்யும் உயர்நூல் இது.

உய்யும் வழிகாட்டும் இந்நூலாசிரியரை வணங்கிப் போற்றி மகிழ்வதல்லால் வாழ்த்தும் வகையறியேன்.

அன்பன்,
ம. பெ. சீனிவாசன்

சிவகங்கை
18-2-2015

# சாற்றுக்கவி

புலவர் பாலைக்கண்ணன், பி.லிட்.,
5, ஜவுளிக்காரத் தெரு,
திருவாரூர்- 610002

திருவாரூர்த் திருநகரில் வாழ்கண் ணப்பன்
தெய்வத்தின் திருவருளால் புனைந்த தான
குருவாயூ ரப்பன்மா லையென் கின்ற
கொஞ்சுதமிழ் நூல்கண்டேன்; குளிர்ந்தேன் உள்ளம்;
இருளான மாயையது நீங்கு தற்கும்
இதயங்கள் தூய்மையினைப் பெறுவ தற்கும்
அருளாட்சி அவனியிலே மலர்வ தற்கும்
அருட்பாக்கள் பாடுவதில் ஆக்கம் பெற்றார்.

காசுக்குப் பாடாத கவிஞ ரான
கண்ணப்பன் மாந்தர்தம் மனத்துட் சேரும்
மாசகற்றப் பாடுவதே தொண்டாய்க் கொண்டார் ;
மாலவனின் பூர்ணாவ தார மான
பேசரிய புகழானை, குருவா யூர்ஆள்
பெருமாளைப் பாடுகின்ற இந்த நூலைப்
பாசமுடன் பக்தியுடன் படிப்ப வர்கள்
பரந்தாமன் அருள்பெற்றுச் சிறப்பாய் வாழ்வர்.

இறைவனவன் திருவருளால் பெற்ற தான
எழிலான கலையெல்லாம் இறைவ னுக்கே
முறையாகப் படைப்பதுதான் கடனென்(று) ஓர்ந்து
முடிவெடுத்துப் பத்திநெறிப் பாக்கள் பாடும்
நிறையுடையார் நெஞ்சுடையார் நம்கண் ணப்பன்
நிலம்புகழ மேன்மேலும் நூல்கள் யாத்து
கறைக்கண்டன் அருளாலும் நம்மைக் காக்கும்
கண்ணபிரான் அருளாலும் வளர்க வாழ்க.

# அருள்மிகு குருவாயூரப்பன் மாலை

## காப்பு
### நேரிசை வெண்பா

குருவாயூர் அப்பன், குறையாவுந் தீர்ப்பான்,
திருமாயன், ஆழித் திகிரிக் – கரநாதன்,
எந்தை, கதாபத்மத்(து) எம்மான் கழல்பாட
ஐந்து கரத்தாய்! அருள்.

## நூல்
### பன்னிருசீர் விருத்தம்

சீரார் மவுலி, திலகநுதல்,
செந்தா மரைக்கண், கோவையிதழ்,
திகழும் இரத்ன குண்டலமும்,
சிவந்த ஒளிசெய் கௌஸ்துபமும்,
காரார் மேனி, ஸ்ரீவஸ்தம்
காணும் மார்பும், மலர்சக்ரக்
கையும். சங்கங் கதைக்கையும்,
கல்வைத்(து) இழைத்த வளைமுத்தும்,
வாரார் துளப மணிமாலை,
மலரார் பொற்பீ தாம்பரமும்,
வணங்கொள் நூபு ரப்பாதம்
வாழ்த்தித் துதித்து வாழஅருள்;
நாரா யணவோ(ம்) நமஎன்றுள்
நாட எனக்குன் அருள்காட்டாய்;
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே! நாயகனே. 1

முன்னம் **பரீட்சித்(து)** எனும்மன்னன்,
முனிவன் ஒருவன் சாபத்தால்,
முரணுந் **தட்ச கன்**பெயரால்
மூளும் அரவத் தால்மாய,
மன்னன் அவன்தன் புதல்வன்என
வருநல் **ஜனமே ஜயன்**ஒருநாள்
மாறாச் சர்ப்ப யாகத்தை
வைத்தாங்(கு) அமைக்க, யாகாக்னி
பின்னும் நாகம் பலவற்றைப்
பெரிதும் அழிக்க, அப்பாவம்
பீடார் ஜயர்க்குத் தொழுநோயைப்
பிறப்பித் திடவுந், **தத்தாத்ரி**
நன்ன யத்தோ(டு) உன்தலத்து
நலஞ்சீர் சொல்ல, நல்லருளை
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 2

புத்தி ரப்பே(று) அதுவேண்டிப்
போற்றும் **பிரஜா பதியாகும்**
பொற்சு **தபஸ் பிரஸ்னியவர்**
பொருந்தித் தவத்தில் முறைநிற்க,
பத்தி பார்த்துப் பிரமனவன்
பரிவாய்க் காண முன்வந்து
பரந்தா மன்தன் உருவடிவைப்
பரவத் தந்(து) உன் புகழ்பேச.
சுத்தத் தானம் இமயத்தில்
தொடங்கித் தாமும் பூசிக்கத்,
தோன்றித் திருமால், *மூன்றுமுறை*
*துலையில் மகனாய் வருவன்* என
நச்சி உரைக்கப், பின்பிறந்து
நண்ணுஞ் செயல்கள் புரிந்தோனே!
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே! நாயகனே. 3

அடுத்த பிறப்பில் காசியபர்
அதிதி யாகும் பெற்றோருக்(கு)
அருவா மனராய்த் தோன்றிப்பின்
அமையும் பிறப்பில் **வசுதேவர்**
எடுத்த **தேவ கித்தாய்க்கோர்**
எழிலார் **கிருஷ்ணன்** எனத்தோன்றி
இயங்கிக் **கம்ச வதஞ்செய்தே**
ஈடில் **துவார கையில்தங்கித்**
தொடுத்து விக்ர கந்தொழுது
துணையாம் **உத்த வரையழைத்துச்**
சுவர்க்கா ரோக ணஞ்சொல்லித்
"தொடர்ந்து சிலையில் வாழ்ந்(து) உயிரின்
நடுக்கந் தீர்ப்பேன்; கலிக்கொடுமை
நாளுங் களைவேன்" என்(று)அருளி
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 4

சீரார் துவார கையில் வெள்ளம்
சேரத், தேவ குருவாகும்
தெய்வப் **பிரகஸ் பதியும்**,அவர்
சீடர் **வாயுஎனும்** இவர்கள்,
ஆராத் துவார கைத்தலத்தில்
அலையில் தத்த எித்தசிலை
அதனை எடுக்க வருணனைமுன்
அழைத்து வணங்கி அதைச்சுமந்தே
நீரார் காசி பாஞ்சாலம்
நீளுந் தேயங் கடந்தேகி,
நிலவும் **பாலக் காட்டுவழி**
நெருங்கிப் **பரசு ராமன்**தன்
நாரார் கேர ளத்தலத்தில்
நாட்டச் செய்யும் மணிமாலே!
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 5.

வாத நோயால் கேரளத்தில்
வாடிப் பலருந் திருச்சூரில்
வாழும் பரசு ராமரிடம்
வந்து முறையிட்(டு) இருக்கும்நாள்,
கீதஞ் செய்யும் நாரதரும்
கேட்டுத் துவார கையிலிருந்து
கிருஷ்ண விக்ர கந்தன்னைக்
கேர ளத்தில் வைத்தேத்திப்
பாது காக்க அந்நோயும்
பற்றா(து) எனத்தான் உரைத்திடவும்
பரசு ராமர் துவாரகைக்குப்
பணிந்து புறப்பட்(டு) ஏகிடவும்
நாதன் சிலையோ(டு) அணைகுருவை
நடுவில் சந்தித் திடச்செய்து
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 6

தாம ரைத்த டாகத்தில்
தண்ணார் கரையில் சிவபெருமான்
தங்கிப் பிராசே தஸுக்கு ருத்ரத்
தனிக்கீ தையைமுன் மொழிந்துரைத்து,
வாமங் கொள்ளும் உமையோடே
வாழும் நாளில், சீதரன் நின்
மணிவிக் கிரகங் கொண்டுகுரு
வாயு வருதல் கண்(டு)அருகில்
சேம ருத்ரக் கூபத்தின்
தீர்த்தம் அபிடே கித்(து)ஏத்திச்
"சேர்ந்(து)இத் தலத்தில் பிரதிஷ்டை
செய்வீர்; குருவாயு புரமென்ன
நாமம் பெறும்இப் பதி" என்று
நவில நிற்குங் காரணனே!
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 7

ஜனமே ஜயனின் தொழுநோயைத்
தாம ரைக்கை தந்(து)அழிக்கும்
தாமோ தரனே! கேசவனே!
தயங்கா(து) அளிக்குந் தயாபரனே!
மனமே மயக்கும் மாதேவா!
மறுமை இம்மை வருவிப்போய்!
மாறாத் தூய்மை புனிதவணம்
வழங்கும் பெருமான்; மடியான
இனமே பெறுதற்(கு) அருள்வோனே!
இயம்புங் கிருஷ்ணா வதாரத்தாய்!
இசைக்கும் பெருமைச் சீவேலி
எனும்ஊர் வலத்தில் இசைந்(து) ஏத்தி
நனவே கனவாய் முன்பின்னாய்
நாம ஜெபமே செய்விப்பாய்!
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. ௮

ஓவி யங்கா வியஞ்சிற்பம்
ஒன்றை ஒன்றாய் விஞ்சுதலம்;
ஒப்பில் தேவ சிற்பியவன்
உணர்வால் கோயில் செய்த தலம்;
தாவிக் கைநீட் டித்தழுவும்
தாயென்(று) ஆக்குங் கிருஷ்ணதலம் ;
சாருஞ் சூர்யன் தன்கதிரும்
தாளைத் தொட்டுப் பரவு தலம் ;
மேவி எம்மான் திருவருளில்
விளங்கச் செய்யும் வைகுண்டம் ;
வேலைப் பாடு காணு தலம்;
விண்ணும் மண்ணும் வாழ்த்து தலம் ;
நாவில் இனிக்க நாமஞ்சொல்
நல்லோர் பற்றுந் தலத்தோனே!
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. ௯

சீர்த்தித் திருமண் டலக்காலம்
செறியும் பஞ்ச கவ்யமுடன்
தெளியும் களப அபிடேகம்,
சிறப்பாய் ஏகா தசிவிளக்கும்,
தீர்த்த வாரி, சீபூதத்
திருவார் பலி,உற் சவ பலியும்,
ஜென்மாஷ் டமி,சித் திரைமாதஞ்
சேரும் விசுவுந், திரிதியையும்
பார்த்திங்(கு) ஆளும் பரமனுக்குப்
பரமார் கழியில் முதற்புதனில்
பகருங் குசேல தினமிங்கே
பகவ திக்கு நவராத்ரி,
நாத்த மும்பே றத் துதிக்கும்
நாம நல்லோர் வாழ்பதியில்
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 10

குருவா யூர்ஏ காதசிநாள்
கூடிச் சபரி மலைப்பழனி
குலவுங் காசி பத்ரிநற்(ர்)தங்
கோல யமுனை யுடன்கங்கை
வருநாள்; திருமுன் முழுநாளும்
மாயன் நடைதான் திறக்கும்நாள்;
மதிநா ரதரின் கானமுடன்
வானில் சென்ற சங்கரரும்
ஒருநாற் பத்தோர் நாட்களிலே
உறுநல் பூசை முறைவகுத்த
உயர்நாள்; கோவர்த் தனநாளாம்;
உலகோர் போற்றுங் கீதையினை
நவநீ தன்அர்ச் சுனர்க்கருளும்
நாள்,இந் திரனின் ஏத்துறுநாள்
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 11

உயத்தான் நிர்மா லியங்காணல்

உகந்து தைலா பிஷேகமுடன்

ஒப்பில் வாகைச் சாத்துணர்தல்

ஒருமும் முறையில் அபிஷேகம்,

வயத்தால் ஐந்து முறைப்பூசை

மருவும் வேளை கண்டுதொழல்

வலச்சீ வேலி மும்முறையும்

வந்து சுற்றிக் கொண்டேத்தல்

செயந்தான் தரு(ம்)நின் திருப்புகையைத்

தெரிந்துள் இருத்தல் புரிந்துன்தன்

சேவைக்(கு) என்றன் வாழ்வாக்கிச்

சிந்தித்(து) உன்தாள் திளையேனோ?

நயத்தால் பயத்தால் வளர்விப்பாய்;

நன்மை காத்துத் தீயலைத்தே

நல்குங் குருவா யூரப்பா!

நாரா யணனே நாயகனே. 12

ஐயப் பன்சண் டன்கருடன்

ஹரிசே னன்இந் திரன்குருவும்

அக்னி துவஜ வாகனன்நல்

அனந்தன் தட்சி ணாமூர்த்தி

செய்ய வாயு வீரபத்ரர்

க்ஷேத்ர பாலர் ஈசானன்

சீரா னந்தா னந்தகந்தன்

சேர்சத் தமாதர் நிருதிதுர்க்கை

வையம் போற்றுங் கணபதியும்

வைச்ர வணச்சோ மன்நமனும்

வருநிர் மால்ய தாரிஅயன்

வருண பகவான் அனந்தசயன்

நையும் படிச்செய் பிரசண்டன்

நாளும் பலிவைத் தருள்மாலே!

நல்குங் குருவா யூரப்பா!

நாரா யணனே நாயகனே. 13

கானார் சந்த னங் களபம்
காலஞ் சார்த்தல், நமஸ்காரம்,
காலட் சேபம், அத்தாழம்,
கணேசன் சாஸ்தா வழிபாடு,
தேனார் மலரால் நிறைமாலை,
சிறந்த எண்ணெய் அபிஷேகம்,
சேர்த்துப் பொட்டுக் கட்டிடுதல்,
செம்மைச் சுற்று விளக்குமணி
ஆனா ஆப ரணம்பட்டில்
அருவஸ் திரங்கா ளையும்பசுவும்
அர்ப்ப ணித்தல், நடைதள்ளல்,
அபிஷே கந்தான் செய்வித்தல்.
நானா வகையாய்ப் புரிந்(து) அன்பர்
நசையால் போற்றுந் தலத்தோனே!
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 14

அடிமை கிடத்தல், துலாபாரம்,
அள்ளிக் குன்றி மணி இறைத்தல்,
அங்கம் ஆள்ரூ பஞ்சேர்த்தல்,
அன்னப் பிராச னந் தீபம்,
படையல் உதயாஸ் தமனம்,நெய்ப்
பாய சமு(ம்) நெற் பொரி அப்பம்
பழுஞ்சர்க் கரையும் இலை அடையும்
பாலோ(டு) இளநீர் அவல் அளித்தல்
அடைய பாக வதஞ்சொல்லல்,
ஆல யத்தில் மண(ம்) முடித்தல்
ஆனை இருத்தல், பகவதியாட்(கு)
அழல்நை வேத்யம் நிகழ்பதியாய்!
நடையில் படலில் கடையேனும்
நடக்கும் நாள்தான் நாடாதோ?
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 15

ஈனந் தொடர்சம் சாரபந்தம்
ஏகு விக்கும்; முத்திதரும் ;
எல்லாத் துரிதம் நோய்நீக்கும் ;
ஈடில் காட்சி வரங்கிட்டும் ;
ஊனந் தகர்க்கும் மங்களமாம் ;
உடன்நம் விருப்பம் நிறைவேறும் ;
உறும்இக் கலியின் கொடுமையறும் ;
உதவுங் கைவல் லிய(ம்) மேலாம் ;
வானம் பூதப் பிசாசுகளால்
வந்துற்(று) இருக்கும் உபாதையறும் ;
வாத ரோகந் தொழுநோயும்
மலரா; புந்தி வளருவிக்கும் ;
ஞானம் அளிக்கும் வழிபாட்டு
நலங்கள் சேர்க்கும் நற்சீராய் !
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 16

நாரா யணவோ நமோநமவோம்
நாரா யணவோ நமோநமவோம்
நாரா யணவோ நமோநமவோம்
நாரா யணவோ நமோநமவோம்
நாரா யணவோ நமோநமவோம்
நாரா யணவோ நமோநமவோம்
நாரா யணவோ நமோநமவோம்
நாரா யணவோ நமோநமவோம்
சீராய்ப் புரக்கும் பாரோனே!
தீராச் சிறப்பொன்(று) உடையாராய்ச்
சென்ற நானூ(று) ஆண்டின்முன்
திருவார் மேப்பத் தூர்தோன்றி
நாரா யணீயஞ் செய்(து)அளித்த
நாரா யணபட் டத்திரிக்கு
நல்குங் குருவா யூரப்பா !
நாரா யணனே நாயகனே. 17

நாரா யணீய நூல்செய்த
நாரா யணபட் டத்திரியின்
நலிவா தத்தைத் தீர்த்தோனே!
நரசிம் மமாக வாதித்தூண்
சீராய்த் தோன்றி நடந்தோனே!
"திருவார் சூடா மணியையென்
செங்கை கொடுத்தான் அனுமன்" எனச்
செப்பித் திகைப்பை உகைத்தோனே!
ஆரா அன்பால் ஆங்காங்கே
ஆமோ தித்துத் தலையசைத்தோய்!
அருளை வளர்க்கும் நூல்இதனால்
அருகாப் பெருமை தருவோனே!
நாரா யணீயஞ் சமர்ப்பித்த
நாளில் நாரா யணீயதினம்
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 18

சீல நாரா யணபட்டத்
திரி,பூந் தானங், குரும்மா
திளைத்துப் பொலியும் பதியோனே!
தேவர் முனிவர் கணத்தோனே!
காலங் கடந்தாய்! யோகத்தில்
காணு(ம்) நித்தி ரைப்பரனே!
கண்ணு றங்கா(து) அருந்தலத்தில்
கலந்துள் துலங்கக் காப்போனே!
நாலுந் தெரிந்தாய்! நடமாட்டம்
ஞாலம் முழுதுங் கொண்டோனே!
நல்ல வெல்லங் கிழங்குகனி
நவைதீர் துலாபா ரச்சீராய்!
ஞால(ம்) மலர்த்து(ம்) நற்சரஸாம்
நன்னீர் ருத்ரத் தீர்த்தம்அருள்
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 19

சீத வயல்கொள் இடத்துபுறத்
திருப்பூந் தானம் எனுங்கவிபால்
சேர்ந்தாய்; மங்காட்(டு) அச்சன்எனத்
திகழ்ந்து களவை மீட்(டு) அளித்தாய்!
பூத முதலோன் நின்செயற்குப்
பூந்தா னந்தான் அன்பளித்த
பொற்பார் கணையா ழியைவிரலில்
பூட்டி மேற்சாந் திக்(கு) உரைத்தாய் ;
பாதத் தூளி பத்தியுடன்
பாக வதச்சீர் பதிக்கீர்த்தி
பகரும் பாடல் நூல்செய்யப்
பார்த்தாய்; விமானந் தனில் ஏற்றி
நாத வைகுண் டஞ்சேர்ப்பான்
நாடி அவர்தம் இடஞ்சென்றாய்;
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 20

குருவா யூர்பால் அடாட்டுகுரூர்
குறிக்கும் மனையாள் குரூரம்மா
குட்டிக் கிருஷ்ணன் லீலைகளில்
குழைவுற்(று) இருக்க அருள்வோனே!
ஒருநாள் வில்வ மங்கலம் ஆங்(கு)
உற்றுப் பிட்சைக்(கு) அமர்நேரம்
"உலகம் மூன்றின் கிரகஸ்தன்
ஒருமால்" என்றே உரைசெய்து
வருநல் பிரம்மச் சாரியென
வாழ்ந்தாய்; நம்பூ திரிநோயும்
மாய வன்தன் நாமஜெபம்
வாய்விட்(டு) அலறத் தீருமென
நயமாய்க் குரூர்அம் மாவுரைக்க
நான்கு ஜென்மப் பிணியோட்டி
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 21

எல்லா உலகத்(து) உயிர்காக்கும்
இறைவா! குருவா யூரப்பா!
எண்ணில் நாமா யிரஞ்சொல்ல
இருப்பாய் குருவா யூரப்பா!
வல்லாய்! ஞாலங் கொளக்குறளாம்
மாலே! குருவா யூரப்பா!
வருவோர் வாசித்(து) உறஅருளும்
வள்ளால்! குருவா யூரப்பா!
பொல்லா அசுரர் தமைச்செற்ற
புராணா! குருவா யூரப்பா!
புவியில் எமக்குக் கண்கண்ட
பொருளே! குருவா யூரப்பா!
நல்லாய்! இலங்கைக்(கு) இறைசெற்ற
நாதா! வானோர்க்(கு) ஆரமுதே!
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 22

குருவா யூரில் ஆளுடையான்
கொடுமை அடைப்பான் தினங்கொடுப்பான்
குருவா யூரில் நின்மலன்நம்
குறைகள் மறைப்பான் திரஞ்சேர்ப்பான்
குருவா யூரில் குலதெய்வம்
குலந்தான் காப்பான் வலந்தருவான்
குருவா யூரில் கடல்வண்ணன்
குரல்கேட்(டு) அருள்வான்; பரம்அளிப்பான்;
குருவா யூரில் அண்டவ(ா)ணன்
கோளைத் தடுப்பான்; தளைஅழிப்பான்;
குருவா யூரில் வருநெறியான்
குற்றம் பொறுப்பான்; பற்(று) ஆவான்;
நரவா தனையை நசித்( து )இன்ப
நல்வாழ்(வு) அருள்வான்; எனநாட
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 23

விளைந்த வளையோன் குருவாயூர்
வேதப் பொருளான் குருவாயூர்
விண்ணோர் வேந்தன் குருவாயூர்
மின்பூண் மார்பன் குருவாயூர்
களைந்து வினைதீர் குருவாயூர்
கனிந்தாங்(கு) அழைப்பான் குருவாயூர்
கருத்தன் கமலன் குருவாயூர்
கருடக் கொடிமால் குருவாயூர்
தெளிந்த அளியான் குருவாயூர்
தினஞ்சீர் வளர்க்குங் குருவாயூர்
தீதில் போதன் குருவாயூர்
சீயம் ஆனான் குருவாயூர்
நலிந்தோர்க்(கு) உதவுங் குருவாயூர்
நயந்துள் பதிக்க அருள்செய்வாய்;
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 24

சீத மலர்த்தாள் விக்கிரமன்,
திருவார் வேணு கோபாலன்,
சீல நாரா யணப்பரமன்,
தேவா திதேவன், எங்கோமான்,
வேத முதலோன், கோவிந்தன்,
விமலன், கிருஷ்ணன், மாதவன்,பூ
மேலாம் வைகுண் டத்துறையும்
விஷ்ணு, பரந்தா மன்,நெடியோன்,
சோதி உருவன், தொண்டர்உளன்,
துக்கங் களைவான், வடநாட்டுத்
துவார கையிலே ஆண்டவன்,முன்
தூதில் சென்றான்; விடம்பருகும்
நாதன் எனநின் பேர்பேச
நல்காய்! ஆனை இடர்கடிந்தாய்!
நல்குங் குருவா யூரப்பா!
நாரா யணனே நாயகனே. 25

கொந்தார் துளவங் கண்ணிபுனை

கோவே! நான்கு முகன்தாதாய்!

கொழுந்தே! ஆயர் குலமுதலே!

குன்றம் எடுத்து மழைகாத்தாய்;

செந்தா மரையாள் திருமைந்தா!

சிறுவன் துருவன் தனைவேதத்

திருவார் சங்கால் தொட்டுணர்வைச்

சேர்த்தாய்; மராம ரஞ்செற்றாய்;

எந்தாய்! என்றுங் காண்(பு) அரியாய்;

ஏதந் தீர்க்கும் ஆதியனே!

இருப்பாய், கிடப்பாய், நிற்பாய்நீ,

இரணி யன்ஆ கங்கீண்டாய்;

நந்தா தவனே! விள(வு) எறிந்த

நங்கள் கோனே! வரோதயனே!

நல்குங் குருவா யூரப்பா!

நாரா யணனே நாயகனே. 26

## தலச்சிறப்பு

மகாவிஷ்ணுவின் அவதாரங்களில் ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்திற்குத் தனிச்சிறப்பு உண்டு. தெய்வத் தன்மையின் பேராற்றலையும் பரிபூரணத்துவத்தையும் காட்டுவது இந்த அவதாரம்.

ஸ்ரீகிருஷ்ணன் கோயில்களில் சிறந்து விளங்குவது குருவாயூர்க் கோயில் ஆகும். பூலோக வைகுந்தம், தென்னகத்தின் துவாரகை என்றெல்லாம் கருதப்படுவது இத்தலம்.

வைகுந்தத்தில் பக்தர்களை வரவேற்க எந்த உருவத்தை மேற்கொள்ளுகின்றாரோ, கிருஷ்ணாவதாரத்தில் தேவகி வசுதேவருக்கு எந்த உருவத்தில் காட்சி அளித்தாரோ அந்த உருவத்தில் இங்கே காட்சி தருகிறார் ஸ்ரீகிருஷ்ணர்.

இவர் ***குருவாயூர்அப்பன்*** என்று போற்றப்படுகிறார்.

இயற்கைச் சூழலில் விளங்கும் கேரளத்தின் முக்கிய க்ஷேத்திரங்களில் இது ஒன்று. இங்கே ருத்ரதீர்த்தம் என்றும் நாராயண ஸரஸ் என்றும் பெயர் பெற்ற புனிதத் திருக்குளம் அருகில் உள்ளது. சங்கு, சக்கரம், கதை, பத்மம் ஆகியவற்றுடன் கூடிய உருவில் ஸ்ரீகுருவாயூரப்பன் காட்சியளிக்கிறார். பக்தர்கள் கோரும் வரங்களை அளிக்கிறார்.

வாதம் முதலிய நோய்களால் துன்புறுவோர் இங்கே சிலகாலம் தங்கி நாராயண ஸரஸில் நீராடி வழிபட்டு நோய் நீங்கப் பெறுகின்றார்கள். இங்கே தரிசிக்கப் பலர் வருகின்றார்கள். குருவாயூர் அப்பனின் சந்நிதி நம் மனத்திற்கு நிம்மதி அளிக்கிறது. கண்கண்ட தெய்வம். இவர் மகிமைகளை விளக்கும் கதைகள், உண்மை நிகழ்ச்சிகள் பல உண்டு. எண்ணற்ற அற்புதங்களை நிகழ்த்தி வருகிறார்.

பகவானின் கையிலுள்ள *சக்கரம்* ஆறுதல் அளித்து வஞ்சம் தீர்க்கவும் தருமத்தை நிலைநாட்டவும் பயன்படுகிறது. அது *காலச் சக்கரம், தருமசக்கரம், சுதர்சனம்* எனவும் அழைக்கப்படும். பகவான் கையிலுள்ள *சங்கானது பாஞ்ச ஜன்னியம்* எனப்படும். இருளையும் மௌனத்தையும் நீக்குவது இது. பகவானின் கையிலுள்ள *பதுமம்* ( *தாமரை* ) பூமியையும், படைப்புச் சக்கரச் சுழற்சியையும், தூய்மையையும், அழகையும் காட்டும்.

புராண வரலாறு: அருச்சுனருடைய பேரனான *பரீட்சித்து மகாராஜா*, ஒரு முனிவரின் சாபத்தினால், *தட்சகன்* என்ற பாம்பினால் தீண்டப்பட்டு மறைந்ததை, அவர் மகன் *ஜனமேஜயன்* அறிந்து தட்சகனிடம் கோபங்கொண்டு, சர்ப்பயாகஞ் செய்தார். அந்த யாக அக்கினியில் ஆயிரக்கணக்கான பாம்புகள் மடிந்தன. அப்பாவத்தினால் ஜனமேஜய மன்னருக்குக் குஷ்டம் உண்டாயிற்று. வைத்தியம் செய்தும் பயன்படாமல் வருந்திய போது *அத்திரி முனிவரின்* புத்திரரான *ஸ்ரீ தத்தாத்திரேயர்* அங்கு எழுந்தருள, அவரிடம் தன் துன்பங்களைத் தெரிவித்தார்.

தத்தாத்திரேயர், "குருவாயூருக்குச் சென்று ஸ்ரீநாராயணனை வழிபடுவது தான் இந்நோய் தீருவதற்குரிய வழி" என்று அத்தல வரலாற்றைப் பின்வருமாறு எடுத்துரைத்தார்.

குருவாயூரிலுள்ள மூல விக்கிரகம் அருள்மிகு நாராயணனுடைய திவ்விய வடிவமேயாகும். பத்ம கல்பத்தின் தொடக்கத்தில் அவர் அதை பிரம்மதேவருக்கு அளித்தார். வராக கல்பத்தின் தொடக்கத்தில் நவ பிரஜாபதிகளில் ஒருவரான *சுதபஸ* என்பவர் தம் பத்தினி *பிரச்னி*யுடன் புத்திரப்பேறு வேண்டி பிரம்மதேவரை நோக்கிக் கடுந்தவம் செய்தார். அவர்கள் பூஜித்த பயனாக மகாவிஷ்ணுவே அவர்கள் முன் தோன்றினார். தங்களுக்கு ஒரு மகன் பிறக்க வேண்டும் என்று மும்முறை அத் தம்பதியர் வேண்டவும், மும்முறையும் மகாவிஷ்ணு *அப்படியே ஆகட்டும்* என்று கூறி, "மூன்று பிறப்பிலும் நானே உங்களுக்கு மகனாகப் பிறப்பேன்; மூன்று ஜென்மங்களிலும் இந்த விக்கிரகத்தை ஆராதிக்கும் பாக்கியத்தை நீங்கள் பெறுவீர்கள்" என்று உரைத்து மறைந்தார். அவர்கள் அந்த விக்கிரகத்தை வைத்துப் பூஜை செய்து வந்தார்கள். பிருச்னி கர்ப்பன் என்ற மகன் பிறந்தான். அந்த மைந்தன் பிரும்மசாரி விரதம் பூண்டு உலகமெங்கும் சஞ்சாரஞ் செய்து தரும பரிபாலனஞ் செய்தான். அடுத்த பிறவியில் அத்தம்பதிகள் *காசயபரா*கவும் *அதிதி*யாகவும் பிறந்தனர். அவர்கள் இந்த விக்கிரகத்தைப் பூஜை செய்ததன் பலனாக *வாமனர்* பிறந்தார்.

அவர்கள் அடுத்த பிறவியில் *வசுதேவர், தேவகியாகப்* பிறந்தார்கள். அவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணர் பிறந்தார். கம்சவதம் நடந்த பின்பு கிருஷ்ணர் துவாரகையில் தங்கி ஸ்ரீ நாராயணனின் வடிவத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டுவந்தார். கிருஷ்ணாவதாரம் முடியப் போகும் தருணத்தில் தனது பிரதம சீடரான *உத்தவரை* அழைத்து அச்செய்தியைக் கூறினார். உத்தவர், கிருஷ்ணர் இல்லாமல் கலியுகத்தில் இப்பூலோக வாசிகளுக்கு எப்படி நிவாரணம் அளிப்பது என்று வருந்தினார். அவரைத் தேற்றி "இந்தச் சிலையில் நான் வாழ்வேன்; இன்னும் சிறிது காலத்தில் துவாரகை வெள்ளத்தில் மூழ்கும்; அப்போது இந்த விக்கிரகத்தைக் கவனமாகப் பாதுகாத்து, தேவர்களின் குருவாகிய *பிரகஸ்பதி*யின் துணைகொண்டு தக்கதொரு இடத்தில் பிரதிஷ்டை செய்துவிடுங்கள்" என்று கூறி மறைந்தார்.தத்தாத்ரேய முனிவரிடம் இந்த வரலாற்றைக் கேட்ட *ஜனமேஜயன்* இங்கு வந்து வழிபட்டு ஒருநாள் ஆலயத்தில் படுத்திருந்தபோது தம் உடல் மீது பகவானின் தாமரைக் கரங்கள் படிவதை உணர்ந்து கண் விழித்துப் பார்த்தார்.தொழுநோயின் அடையாளமே சிறிதும் இல்லாமல் அவர் பூரணமாகக் குணமடைந்திருந்தார்.

**கோயில்அமைப்பு:** குருவாயூரப்பன் கிழக்கு நோக்கிக் காட்சியளிப்பதால் கிழக்குப்பக்கம் ( கோபுரத்துடன் கூடிய ) பிரதானவாயில் உள்ளது. அதைத் தாண்டினால் பெரிய நடைப்பிரை. இதை ***யானைப்பந்தல்*** என்பர். இதில் தங்கக் கொடிமரம் ( துவஜ ஸ்தம்பம் ), அருகில் பெரிய பலிபீடம் ஆகியவை உள்ளன. கொடிமரத்தின் நான்கு பக்கங்களிலும் வெள்ளி பூசிய கம்பிகளால் வேலி அமைக்கப்பட்டுள்ளது. கொடி மரத்தின் முன்னால் உண்டியல் பெட்டிகள் உள்ளன. இதன் மேல் பக்கங்களில் புராணப் படங்கள் அலங்காரமாக வைக்கப்பட்டுள்ளன. ***கஜராஜன்*** என்ற விருது பெற்றுப் பிரசித்திப் பெற்ற கோயில் யானையின் சித்திரமும் தந்தங்களும் காணப்படுகின்றன. நடைப்பிரைக்கு உட்புறம் இருப்பது *விளக்கு மாடம்*. நடைப்பிரையின் தென்கிழக்கு மூலையில் ***கூத்தம்பலம்*** இருக்கிறது. இங்கே அநேக சித்திரங்களும் சிற்பங்களும் உள்ளன. இந்த இடம் உற்சவ காலங்களில் ***சாக்கியார் கூத்து*** நடத்துவதற்காக நிர்மாணிக்கப்பட்டது. ***சாக்கியார்*** என்பவர்கள் புராணக் கதாகாலட்சேபத்தை நகைச்சுவையுடன் நடத்துபவர்கள்.மேற்குப் பக்கமாகச் சென்றால் வடப்புறமாக இருக்கும் சிறு அம்பலம் *சாஸ்தா கோயில்*. இங்கே செய்யப்படும் வழிபாடுகளில் முக்கியமானது *தேங்காய் எறிதல்*. இதற்காக ஒரு சிலை(கல்) நாட்டப்பட்டுள்ளது. மலைக்குச் செல்லும் ஐயப்பன்மார்கள் இங்கே இருமுடி கட்டிக் கொள்கின்றனர். தென் பிரகாரத்தில் வலம் வரும்போது நமக்கு இடதுபக்கத்தில் அறைகள் இருப்பதைக் காணலாம். அவற்றில் ஒன்று *பொக்கிஷ அறை*. மாடியில், மேல் சாந்தி தங்கும் விடுதி இருக்கிறது. (ஆறு மாதங்களுக்குத் தீவிர பிரம்மசாரியத்தைக் கடைப்பிடித்து ஆசார அனுஷ்டானங்கள் தவறாமல் இருக்க வேண்டுமாதலால்

இவர் ஆலயத்தின் உள்ளேயே இருக்கிறார்). மேற்குக் கோபுரத்தின் தென்புறமுள்ள பாகம் *கலவறை (உக்கிராண சாலை);* வடக்குப்பக்கமாக இருக்கும் பகுதி *சமையல் அறை.* ஒரு சாப்பாட்டுக் கூடமும் இருக்கிறது. பிரதட்சிணமாக வந்து கிழக்கே திரும்பினால் *வடக்கு நடைப்பிரை.* உற்சவ காலங்களில் யானைமேல் பகவானை வைத்து வரும்போது இந்த நடைப்பிரையில் இறக்கி மண்டபத்தில் அமர்த்துவர்.

அப்போது *தாயம்பகா* என்ற மேள விசேஷங்கள் நடைபெறும்.

இந்த இடத்தில் முன்பு ஓட்டுக்கூரையுடன் கூடிய யானைப் பந்தல் இருந்தது. தற்போது பெரிய மண்டபமாக மாற்றி அமைத்து விட்டார்கள்.

பழைய யானைப் பந்தலில்தான் முன்பு *கிருஷ்ணாட்டம்* நடைபெறும். அந்த மண்டபத்தின் கூரையில் ஒரு சிறு துவாரம் இருக்கும். புதிய சிமெண்ட் கூரையிலும் அந்தத் துவாரம் காணப்படுகிறது. முன் காலத்தில் ***குருவாயூர் ஏகாதசித்*** திருவிழா நாளில் ( நாரதருடன் ) ஆதிசங்கரர் ஆகாய வழியாகச் சென்றுகொண்டிருந்தபோது இந்த இடத்தில் விழுந்து மயக்கமடைந்தார். பின்பு கண் விழித்தபோது எல்லாமே விஷ்ணுமயமாகத் தெரிந்தது; தேவர்கள் பூமாரி பொழிந்தனர்.அதை நினைவுபடுத்தும் வகையில் கூரையில் துவாரஞ் செய்து வைத்திருக்கின்றார்கள்.அந்த இடத்திற்குச் சீவேலி வரும்போது வாத்திய கோஷங்கள் சற்று நிறுத்தப்பட்டுப் பின்பு தொடர்கின்றன. இது ஆதிசங்கரருக்கு மரியாதை செய்வதற்காக அமைந்துள்ளதால் இந்தப் பகுதியில் சீவேலி தரிசனம் மிகவும் விசேஷம் என்று கருதப்படுகிறது.

இந்தப் புது மண்டபத்திலிருக்கும் தூண்களையொட்டி சில கடவுளர், மகான்களின் சிமெண்ட் உருவச் சிலைகளை அழகாகச் செய்து வைத்திருக்கின்றார்கள். வில்வ மங்கள சுவாமிகள், பூந்தானம். குரூர் அம்மா, குசேலர் போன்றவர்களின் சிலைகள் உள்ளன.

இந்தப் புது மண்டபத்தையும் உட்பிரகாரத்தையும் இணைக்கும் சிறு வழி ஒன்று இருக்கிறது.வலம் வந்து கொடிமரத்தின் அடியிலிருந்து உட்பிரகாரத்திற்கு வருகிறோம். உள்ளே நுழைந்து *நமஸ்கார மண்டபம்* நோக்கிச் செல்கிறோம். ***வாதில் மாடம்*** வழியாக உட்புறம் செல்லும்போது பக்கத்தில் காணப்படும் இடத்திற்கு ***அறத்துக்கெட்டபடி*** என்று பெயர். இங்கிருந்துதான் ***மேப்பத்தூர் நாராயண பட்டதிரி ஸ்ரீ நாராயணீயம்*** இயற்றினார்.உட்பிரகாரத்தில் வலம் வருகிறோம். கர்ப்பக் கிரகத்தின் நான்கு பக்கங்களிலும் கர்ப்பக் கிரகத்தைத் தொடாமல் இருக்கும் கட்டிடங்களுக்கு ***நாலம்பலம்*** என்று பெயர். இதன் தென்கிழக்கு மூலையில் *தடப்பள்ளி* என்ற இடம் இருக்கிறது. இங்குதான் பகவானுக்கு நைவேத்திய பதார்த்தங்கள் தயார் ஆகிறது. இந்த இடத்தில் தினமும் ***கணபதி ஹோமம்*** நடக்கும்.தென்மேற்கு மூலையில் கணபதி கோயிலும் அதற்கு எதிராகக் கிழக்கே சரஸ்வதி அறையும் உண்டு. நவராத்திரி உற்சவத்தின்போது இந்த அறையில் சரஸ்வதி பூஜை நடைபெறும்.

மேற்குப் பிரகாரத்தில் கருவறைக்குப் பின்புறம் நேர் எதிரே அனந்த சயனக்காட்சி கல்லில் செதுக்கப்பட்டுள்ளது.அதற்குப் பக்கத்தில் மேல்சாந்தி அமர்ந்துகொண்டு மடியாகத் தீர்த்த சந்தன புஷ்பப் பிரசாதம் அளிக்கிறார்.

வடக்குப் பிரகாரத்திலிருந்து வெளிப்பிரகாரத்திற்குச் செல்லும் வழியில் நுழைவதற்கு முன் வலதுபுறம் திண்ணையில் உள்ள *நிருத்தம்* என்ற இடம் வில்வ மங்கல சுவாமியாரால் புனிதமடைந்த இடம். இந்த இடத்தில் அவர் அமர்ந்து தியான நிஷ்டையில் இருப்பார். தன்னை மறந்து ஆட்டம் ஆடுவார். அதனால் இந்த இடத்திற்கு *நிருத்தம்* என்று பெயர்.இந்த இடத்தில்தான் *வாரயர்* வரவு செலவுக் கணக்குகளை வாசிக்கிறார். இதற்குக் *குருத்தோலை வாசித்தல்* என்று பெயர்.

கருவறைக்கு வடகிழக்கில் கோயில் கிணறு உள்ளது. பஜனம் இருப்பவர்கள் காபி, டீ க்குப் பதிலாக அதன் நீரைப் பருகுகின்றனர்.

கருவறையைச் சுற்றிலும் வண்ண ஓவியங்கள் காணப்படுகின்றன. மேல்நிலையில் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

வடப்புறம் வந்து நின்று தங்கவிமானத்தைக் கண்டு தரிசிக்கலாம்.

வருடத்தில் இரண்டு முறை சூரியபகவான் அப்பனின் திருவடிகளைத் தழுவி வணங்கும்படி மூலஸ்தானம் அமைந்திருக்கின்றது.

திருச்சன்னிதிக்கு நேரே குறுகலான வாசல், கதவு. அதற்கு முன்னால் பெரிய பலிக்கல். துவஜஸ்தம்ப பீடத்தின் அருகில் இருந்தும் கோபுர வாசலில் இருந்தும் பகவானை நன்றாகத் தரிசிக்கும்படி கோயில் கட்டப்பட்டிருக்கிறது.

வடகிழக்கு மூலையில் *பகவதிகோயில்* உள்ளது. அவள் கண்ணாடி பிம்பமாக இருக்கிறாள்.

இந்தப் பகவதி சந்நிதியைச் சுற்றி வருபவர்கள் வடகிழக்கு மூலையில் நின்று *மம்மியூர் ஆலயம்* இருக்கும் திசையில் திரும்பி அம்மைக்கும் அப்பனுக்கும் (சிவன்) வணக்கம் செலுத்துவது உண்டு.

பகவதிக்கு அரிசி, தேங்காய், அவல் ஆகியவற்றை நைவேத்தியம் செய்கிறார்கள். சுத்தமான துணியை எண்ணெயில் நனைத்து தீபம் ஏற்றி, பூஜை செய்கிறார்கள். இதற்கு *அழல்* என்று பெயர். மாலை தீபாராதனை முடிந்து அத்தாழ பூஜைக்கு முன்பாக இந்த நைவேத்தியம் நடைபெறும். இது பகவதிக்கு மிகவும் உகந்த நைவேத்தியம்.

திருவிழாக்கள்: குருவாயூர்க் கோயிலில் ஒவ்வோரு நாளும் திருவிழாக் கோலம்தான். எனினும் மண்டல காலமும், வைசாக விழாவும் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

கேரளத்தில் *மண்டலகாலம்* என்பது நவம்பர் மாத மத்தியில் (கார்த்திகை முதல் நாள்) தொடங்கி 41 நாட்கள் நடைபெறும். மண்டல காலத்தில் மூலவருக்கு பஞ்ச கவ்விய அபிஷேகம் ( பசுவின் பால், தயிர், நெய், கோஜலம், கோமயம் சேர்ந்தது) சிறப்பான அம்சமாகும்.

மண்டல காலத்தின் கடைசி நாளில் பகவானுக்குக் *களபாபிஷேகம்* என்னும் சந்தனாபிஷேகம் நடைபெறும். (பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ முதலான பொருள்களைச் சேர்த்துத் தயார் செய்யப்படும் சந்தனம், *களபம்* எனப்படும்). ஆண்டுக்கு ஒருமுறை நடைபெறும் இந்த அபிஷேகம் ஸாமோரின் என்ற அரச வம்சத்தினரால் நடத்தப்படுகிறது.

மண்டல காலத்தில் **குருவாயூர் ஏகாதசி** ( கார்த்திகை சுக்ல ஏகாதசி ) என்று பிரசித்திப் பெற்றுள்ள ஏகாதசி உற்சவம் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. பக்தர்கள் கூட்டம் அச்சமயத்தில் அதிகமாக இருக்கும். ஏகாதசிக்குப் பதினெட்டு நாட்களுக்கு முன்பே உற்சவம் தொடங்கிவிடும். தினமும் எல்லா விளக்குகளும் ஏற்றப்படும். பக்தர்கள் ஒவ்வோரு நாளும் ஆகும் செலவை ஏற்கின்றனர்.ஏகாதசி நாளன்று விடியற்காலையிலிருந்து மறுநாள் ( துவாதசி ) காலை வரை சந்நிதி திறந்து வைக்கப்பட்டிருக்கும். அன்று சுவாமி புறப்பாடும் உண்டு. நாரதர் அன்று இங்கு வந்து தேவகானம் இசைக்கிறாராம். ஆகாய மார்க்கமாகச் சென்ற ஸ்ரீஆதிசங்கரர் குருவாயூர்க் கோயிலுக்கு வந்து 41 நாட்கள் தங்கி, பூஜை முறைகளை வகுத்து அளித்தது அன்றுதான். அருச்சுனருக்குக் கீதை உபதேசம் நடைபெற்றதும் ஸ்ரீகிருஷ்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாகப்பிடித்து நடனம் செய்ததும் அன்றுதான்.இதனால் கர்வம் அடங்கிய இந்திரன் அன்று குருவாயூருக்கு வந்து பல செல்வங்களை அளித்து வழிபடுவதாகக் கூறப்படுகிறது. இங்கே ஏகாதசியன்று காசி, பத்ரி, சபரி, பழனி போன்ற தலத்துத் தெய்வங்களும் கங்கை, யமுனை போன்ற புண்ணிய நதிகளும் வந்து சிறப்பிக்கின்றன.

***வைசாகத் திருவிழா*** ஏப்ரல் மே மாதங்களில் கொண்டாடப்படுகிறது. இந்த மாதத்தில் அட்சய திரிதியை (சித்திரை மாதம் சுக்ல பட்சம் திரிதியை) *பலராமனின் ஜென்ம தினமாகக்* கொண்டாடப்படும். மாசி மாதம் பிரம்மோற்சவம், பூச நாளன்று கொடியேற்றம். முதல் நாளன்று கொடியேற்றத்திற்குப் பின்பு ***ஆனையோட்டம்.*** கிழக்குக் கோபுரத்திற்கு நேரே அரை மைல் தொலைவில் யானைகள் வரிசையாக நிறுத்தப்பட்டு ஓட்டப்பந்தயம் தொடங்குகிறது. முதலில் வந்து கொடிமரத்தைத் தொடும் யானை 10 நாட்களுக்கு கோயிலின் உள்ளேயே வைத்துக்கொள்ளப்படும். பிரம்மோற்சவத்தின் முதல் ஆறு நாட்களும் மூன்று வேளையும் *சீவேலி* உண்டு. 5 யானைகள் அதில் பங்கு கொள்ளும். காலை *பந்தீரடி பூசைக்கும்*, இரவிலும் **ஸ்ரீ பூத பலி** நடைபெறும்.ஊர்வலத்தில் செண்டையும் தாளங்களும் கொண்ட "தாயம்பகா" முழங்கும். எட்டாம் திருநாளன்று ***உற்சவ பலி*** மிக முக்கியமானது. அது உள்பிரகாரத்தில் மதியம் 12 மணி முதல் 4 மணி வரை நடைபெறும். அதன் பிறகு பக்தர்களுக்கும் பிராணிகளுக்கும் பறவைகளுக்கும் ஆகாரம் அளிக்கப்படும். ஒன்பதாவது நாளன்று சுவாமி வேட்டைக்குப் புறப்படுகிறார். பக்தர்களும் கொடிய மிருகங்களின் வேடம் புனைந்து உடன் வேட்டைக்குச் செல்கின்றனர். பத்தாவது நாள் ***ஆறாட்டு உற்சவத்தில்***

சுவாமி குளத்தைச் சுற்றி வந்த பிறகு திருக்குளத்தில் *ஆறாட்டு* தொடங்கும். அப்போது பெரிய அளவில் இளநீர் அபிஷேகமும் நடக்கும். அன்று உச்சிக் கால பூஜை. இரவில் பகவதி கோயிலில் நடைபெறுகிறது. அதற்குப் பிறகு வேகமாகப் பதினோருமுறை கோயிலை வலம் வந்து பகவான் கருவறைக்குள் பிரவேசிக்கிறார். பின்னர் கொடி இறக்கத்துடன் பிரம்மோற்சவம் முடிவடைகிறது.

*ஜென்மாஷ்டமி* (ஆவணி மாதம் வரும் கிருஷ்ணாஷ்டமி; கிருஷ்ண ஜெயந்தி) குருவாயூரில் முக்கியமான திருநாள் ஆகும். அன்று பக்தர்களுக்கு அப்பம் தாராளமாக விநியோகிக்கப்படும். தேவஸ்வம் ஆபீஸ் அலுவலர்கள் ஒன்று சேர்ந்து இத்தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள்.

சித்திரை மாதம் முதல் தேதி *விஷுக்கனி பார்த்தல்*.மார்கழி மாதம் முதல் புதன்கிழமை *குசேலர் தின*மாகக் கொண்டாடப்படுகிறது. அன்று பக்தர்கள் குருவாயூரப்பனுக்கு அதிக அளவில் *அவல்* அளிக்கிறார்கள். பகவதி கோயிலில்*நவராத்திரி விழா, தாலப் பொலி* ஆகியவை சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.*தாலப்பொலி* என்பது மார்கழி மாதம் 21-ந் தேதி பெண்களால் நடத்தப்படும் விழா. அம்பிகையின் ஓவியத்தைத் தரையில் வரைந்து *(களம் எழுதுதல்)* பெண்கள் ஆடிப்பாடி மகிழ்வார்கள்.

அதிகாலையில் 3 மணிக்கு நடைபெறும் *நிர்மாலிய தரிசனம்* முக்கியமானது. முதல் நாளின் சந்தனக்காப்பை ஆடை அணிகளுடன் தரிசனம் செய்வது இது. காலை 3 மணிக்கு நாதஸ்வரம் ஒலிக்க கதவு திறக்கப்படும். எல்லோரும் தரிசிப்பார்கள். பிறகு மேல் சாந்தி முன்தினம் அணிவிக்கப்பட்டிருந்த ஆடை ஆபரணங்களை எல்லாம் அகற்றுவார். அப்போது *விசுவ ரூப தரிசனம்.* அதன்பிறகு *தைலாபிஷேகம்* நடைபெறும். இதற்காக பிரத்தியேகமான எள் எண்ணெய் தயாரிக்கிறார்கள். எண்ணெய் அபிஷேகத்திற்குப் பின்பு ஒருவித மரப்பட்டையை இடித்துத் தயாரிக்கப்படும் *வாகைப் பொடியைப்* போட்டு எண்ணெய் போகத் தேய்க்கிறார்கள். அதற்கு *வாகைச் சார்த்து* என்று பெயர். பிறகு *புருஷ சூக்தம்* சொல்லி *சங்காபிஷேகம்* நடக்கும். அடுத்தது தங்கக் குடத்திலிருக்கும் (பிரம்ம கலச மந்திரத்தால் புனிதப்படுத்தப்பட்ட) தீர்த்தத்தால் *பூர்ணாபிஷேகம்* செய்யப்படும்.இந்த அபிஷேக நல்லெண்ணெயும் *தீர்த்தமும்* பலவித நோய்களை நீக்கும் தன்மை உடையவை. பின்பு மலர், நெற்பொரி (அரிசிப் பொரி) கதலிப் பழம், சர்க்கரை நைவேத்தியம் ஆகும். வெளியில் அஷ்டபதி கானத்துடன் வாத்திய கோஷம் கேட்கும். மேல் சாந்தி காலை 5 மணிக்கு கணபதி ஹோமம் முடித்து அரை மணி நேரம் கோயிலைச் சார்த்தி *பிரசன்ன பூஜையும் உஷத் கால* பூஜையும் செய்கிறார். இந்தப் பூஜையின் பிரதான நைவேத்தியம் *நெய்ப் பாயசம்*.காலை 6.30 மணிக்கு யானையின் மீதான *சீவேலி* கோயிலை மூன்று முறை வலம் வரும். முதல் வலத்தில், மேல் சாந்தி, பரிவார தேவதைகளுக்கு *அன்னபலி* இடுகிறார்.

இது மிகவும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. ( தன்னுடைய பரிவார தேவதைகளுக்கு அன்னபலி அளிப்பதை பகவான் அருகில் வந்து கவனிக்கிறார் என்பதுதான் சீவேலி தத்துவம்).

குருவாயூரில் கொடி மரத்திற்கு முன்னால் இருக்கும் பெரிய பலிக்கல் *ஹரிசேனன், துவஜ வாகனன்* ஆகியோருக்கு உரியது. அதன் வடக்கில் *குரு, வாயு* என்ற இருவரின் பலிக்கற்கள் உள்ளன. வடகிழக்கே க்ஷேத்ரபாலர், மூலஸ்தானத்தின் இரண்டு பக்கங்களிலும் சண்டன் பிரசண்டன் ஆனந்தானந்தர்களும், கருவறைக்கு முன்னால் படிக்கட்டுக்குக் கீழே இந்திரன், மண்டபத்தில் கருடன், தென்கிழக்கு மூலையில் அக்கினி, தெற்கில் கணபதி, தட்சிணாமூர்த்தி, யமன், வீரபத்திரர், விக்னேஸ்வரர், ஐயப்பன், சப்த மாதர்களும், தென்மேற்கில் கணபதி, அனந்தன், நிருதிதேவனும், மேற்கில் அனந்தசயனம், வருணனும், வடமேற்கு மூலையில் வாயு, துர்க்கை, சுப்பிரமணியரும், வடக்கில் சோமன், வைச்ரவணன், வடகிழக்கில் நிர்மாலிய தாரி, ஈசானன் பிரம்மாவும் இருக்கிறார்கள்.சீவேலி வேளைகளில் இந்தக் கிணற்றிலும் பலி போடப்படுவது உண்டு.வாத்தியங்கள் ஒலிக்க, தங்க விக்கிரகத்தை யானைகள்தாங்க, அவற்றின் பின்னால் பக்தர்கள் "ஹரே ராம, ஹரே ராம, ராம, ராம, ஹரே ஹரே! ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே!" என்று பாடித் தாளம் இட்டுக்கொண்டு வருவார்கள். இவ்வாறு மூன்று முறை வலம் வருவார்கள். ஏழு மணிக்குள் சீவேலி முடிந்துவிடும்.பிறகு எட்டு மணிக்குப் *பால் அபிஷேகம்* செய்வார்கள். பிருந்தாவனத்தில் இந்திரன் நடத்திய கோவிந்தாபிஷேகத்திற்குச் சமமானது இது. பக்தர்கள் பாலுடன் இளநீரும் பன்னீரும் தாராளமாக அளிப்பார்கள். அத்துடன் வேதம் ஓதும் *ஒதிக்கன்மார்* என்னும் நம்பூதிரிகள் பகவானுக்கு நீர் அபிஷேகம் செய்வார்கள். ஒன்பது வெள்ளிக் கலசங்களிலிருந்து மந்திர ஜபம் செய்யப்பட்ட தீர்த்தம் அபிஷேகம் ஆகும். இதற்கு *நவகாபிஷேகம்* என்று பெயர்.இதைத் தொடர்ந்து *பந்தீரடி பூஜை*. இந்த அபிஷேகமும் பூஜையும் மேல் சாந்தி செய்வதில்லை. அன்றாடம் நடைபெறும் நான்கு பிரதான பூஜைகளில் இதுவும் ஒன்று ஆகும். இந்தப் பந்தீரடி பூஜைக்குச் சீவேலி இல்லை. மற்ற மூன்றுக்கும் உண்டு. இந்தப் பந்தீரடி பூஜைக்கு அன்னமும் சர்க்கரைப் பாயசமும் பிரதான நைவேத்தியம். இந்தப் பூஜை 10 மணிக்குள் முடிவடைந்துவிடும். 11-30 மணிக்கு *உச்சிக்கால பூஜை* ( மத்தியான பூஜை ) நடைபெறும். இது மிகவும் முக்கியமான பூஜையாகும். அன்னமும் பால் பாயசமும் முக்கிய நைவேத்தியம். விசேஷமாக வெள்ளியுருளியில் அன்னம் படைத்து, வெள்ளிக் கிண்ணங்களில் மோர்க்குழம்பு, ளிசேரி, பழப்பிரதமன், தயிர் ஆகியவையும் சேர்த்து நைவேத்தியம் செய்வார்கள். ஐந்து முகமான நைவேத்தியம் செய்யப்படுவதால் இதற்குப் *பஞ்சமுக நைவேத்தியம்* என்று பெயர். பிறகு *பிரசன்ன பூஜை*.

இந்தப் பூஜையின்போது செண்டை மத்தளம், கொம்பு, குழல் போன்ற எல்லா வாத்தியங்களும் ஒலிக்கும். இப்போது சீவேலி இல்லை. பிறகு 12 மணி வரை தரிசனம் நடந்து கொண்டிருக்கும். பின்பு நடை அடைக்கப்படும்.மாலை 5 மணிக்கு நடை திறக்கப்படும். மத்தியான பூஜையின் அங்கமான *சீவேலி* நடைபெறும். சந்திக் காலத்தில் (அஸ்தமன பொழுதில்) பகவானுக்குத் *தீபாராதனை* ஆகிறது. இந்தக் கோயிலில் தீபாராதனை இப்போது மட்டும்தான் நடக்கும். அப்பன் மங்கள ஆரத்தியில் தங்கவண்ணத்தில் பிரகாசிக்கிறான். நம் கண்களுக்குப் புலப்படாமல் முப்பத்து முக்கோடி தேவர்களும் இப்போது இங்கு வந்து வழிபடுகிறார்கள் என்று புராணம் கூறுகிறது. இரவு 8 மணிவரை இடைவிடாமல் தரிசனம் செய்யலாம். இரவு 8 மணிக்கு *அத்தாழ பூஜை* ஆரம்பம், இதுதான் கடைசிப் பூஜை. நைவேத்தியங்களில் இலையடை, பால்பிரதமன், நெய் அப்பம் முதலியவை பிரதானமானவை. பின்பு *அத்தாழச் சீவேலி*. இதற்குப் பிறகு சுற்று விளக்குப் பிரார்த்தனை இருந்தால், ஆலயமெங்கும் விளக்குகள் எரிய, மூன்று அல்லது ஐந்து யானைகளுடன் ஆலயத்தை ஊர்வலம் வரும்போது, பெருங்கூட்டம் கூடவே செல்லும்.சீவேலியை முடித்துக்கொண்டு பகவானை உள்ளே எழுந்தருளச் செய்து திருப்புகை காட்டுவார்கள். *(திருப்புகை* என்பது பகவானுக்குத் தூபம் காட்டுவதாகும்).அஷ்ட (எட்டு) கந்த தீபாராதனை இது. பூதப் பிரேதப் பிசாசுகளின் உபாதை ஒழிய இது உபயோகமானது. இது முடிந்தவுடன் சுமார் 10 மணிக்கு நடை சாத்திவிட்டு மேல்சாந்தி முதலானோர் வெளியே வந்துவிடுவார்கள்.

## வழிபாடுகள்(பிரார்த்தனைகள்)

***சுற்றுவிளக்கு:*** குருவாயூரிலுள்ள பல்வேறு பிரார்த்தனைகளில் ஒன்று *சுற்றுவிளக்கு* (லட்சத் தீபம்). கோயிலின் எல்லா இடங்களிலும் தீபங்களால் அலங்காரம் செய்து அத்தாழப்பூஜை முடிந்தபிறகு பல வாத்தியங்களுடன் பகவானை யானை மீது எழுந்தருளச் செய்து பிரதட்சிணம் செய்விக்கும் வைபவத்திற்குச் ***சுற்றுவிளக்கு*** என்று பெயர். விளக்கு ஏற்றுவதற்கு பொதுவாக தேங்காய் எண்ணெய் உபயோகிக்கிறார்கள். தனி நெய் உபயோகிப்பவர் உண்டு. பிரார்த்தனை செய்துகொண்டவரின் குடும்பத்தினர் முதலில் விளக்குகளை ஏற்றுகிறார்கள். இதனால் புண்ணியம் அதிகம்.

**அன்னப்பிராசனம்( சோறூணு ):**இந்தக் கோயிலில் குழந்தைகளுக்கு முதன் முதலில் அன்னமிடும் சடங்கு இது. பந்தீரடி பூஜை, உச்சிக்கால பூஜை அல்லது அத்தாழ பூஜையின் போது கொடி மரத்தினடியில் இந்தப் பிரார்த்தனை நிறைவேற்றப்படுகிறது.

*அடிமைகிடத்தல்( நடை தள்ளல் ):*சிலர் தங்கள் குழந்தைகளை பகவானுடைய குழந்தைகளாக சங்கல்பம் செய்து நடையில் கிடத்துகிறார்கள். இதற்கு *அடிமை கிடத்தல்* என்று பெயர்.

**ஆள் ரூபம் சமர்ப்பித்தல்:** கண், கால், கை முதலான அங்கங்களை

சிறிய உருவில் மரத்தினாலோ, வெள்ளியினாலோ, தங்கத்தினாலோ செய்து பகவானுக்குச் சமர்ப்பித்தால் நமது நோய்கள் தீருகின்றன. இதற்கு *ஆள்ரூபம் சமர்ப்பித்தல்* என்று பெயர். சொந்தமாகப் பிரதிமைகளையும் செய்து வைக்கலாம். தேவஸ்தானத்தில் பணம் செலுத்தி நமக்குத் தேவையான உருவங்களைப் பெற்றுக்கொண்டு செலுத்தலாம்.

**துலாபாரம்:** பழம், இளநீர், வெல்லம், சேனைக்கிழங்கு, கயிறு, சர்க்கரை, சந்தனக் கட்டை, வெண்ணெய், தயிர் முதலான எந்தப் பொருளையும் துலாபாரத்திற்குப் பயன்படுத்தலாம். நாம் உட்காரும் தட்டில் ஒரு ரூபாய் பணம் வைக்கவேண்டும். நம் எடைக்குச் சரியான பொருளை வைத்து அதை ஆலயத்திற்கே அளித்துவிடவேண்டும். இங்கே துலாபாரம் கொடுக்கும்போது பல அதிசயங்கள் நடைபெற்றுள்ளன.

விவாகம்(கல்யாணம்) : குருவாயூர்க் கோயிலில் கொடிமரத்திற்குக் கிழக்கில் வைத்து கலியாணங்கள் நடக்கின்றன.கோயிலுக்கு ஒரு தொகையைச் செலுத்திவிட்டு அபிஷேக தீர்த்தம்,பிரசாதம், மாலைகள் முதலானவற்றைப்பெற்றுக் கொள்ளலாம்.மணமக்கள் மாலையை மாற்றிக்கொண்டு அப்பனைத் தரிசித்துவிட்டு ஆலயத்தை வலம்வந்தால் திருமணம் முடிந்து விடுகிறது.

**கடுகு குந்துமணி வாரி இறைத்தல்:** கொடி மரத்திற்கு அருகில் பெரிய பாத்திரங்களில் கடுகும், குந்துமணியும் கலந்து நிரப்பி வைக்கப்பட்டிருக்கிறது. பிரார்த்தனை செய்து கொண்டவர்கள் உண்டியலில் பணம் செலுத்திவிட்டு *குந்துமணிகளைக் கையில் வாரி இறைத்து* மீண்டும் அந்தப் பாத்திரத்திலேயே போட்டுவிட்டுச் செல்கிறார்கள்.

*உதயாஸ்தமனபூஜை:* சூரிய உதயம் முதல் அஸ்தமனம் வரை எல்லாப் பூஜைகளையும் நடத்துவதற்கு *உதயாஸ்தமன பூஜை* என்று பெயர். இது பிரார்த்தனைகளில் மேலானது. அதிக செலவு பிடிப்பது.

*யானைஇருத்தல்:* சீவேலிக்குப் பகவானை எழுந்தருளச் செய்வதற்காக யானையை வழிபாடாக அளிப்பார்கள். இதற்கு *யானை இருத்தல்* என்று பெயர்.

*பாகவத பாராயணம்:* குருவாயூரில் பாகவத பிரவசனத்திற்கு முக்கியத்துவம் அதிகம். குருவாயூரப்பனுக்கு பாகவதம் படிப்பதில் உள்ள விருப்பம் வேறு எதிலும் இருப்பதில்லை. *பாகவத ஸப்தாக யக்ஞம்* குருவாயூரில் அடிக்கடி நடக்கிறது. இந்தப் புராணத்தைச் சொல்லும் விற்பன்னர்கள் இங்கே உள்ளனர். குருவாயூர்க் கோயிலில் பாகவதத்தைச் சுருங்கக் கூறும் *நாராயணீய சொற்பொழிவுகளும்* அடிக்கடி நடைபெறும். இவை இரண்டையும் வழிபாடுகளாக நடத்துவது உண்டு. பலருக்கும் கதை கேட்க வைக்கும் புண்ணியம் இதனால் ஏற்படுகிறது. கூத்தம்பலத்தில் இது நடத்தப்படுகிறது.

*பலவகை வழிபாடுகள்:* பலவிதமான ஆபரணங்கள் வஸ்திரம், மணி, ரத்தினம், விளக்கு, பாத்திரம், காய்கறிகள், பசு, காளை, கன்றுக்குட்டி முதலானவை

இங்கு பகவானுக்கு அர்ப்பணம் செய்யப்படுகின்றன. ஓட்டம் துள்ளல், சங்கீதக் கச்சேரி, பரதநாட்டியம், ஹரி கதா காலட்சேபம் முதலானவற்றையும் வழிபாடாக நடத்துவது உண்டு.

## *நாராயணீயம்*

மேப்பத்தூர் ஸ்ரீ நாராயணபட்டதிரி சுமார் 400 வருடங்களுக்கு முன்பு கேரளத்தில் *பொன்னானி* தாலுகாவைச் சேர்ந்த நம்பூதிரி குடும்பத்தில் பிறந்து 106 வயது வரை வாழ்ந்து மறைந்தவர். அவர் தந்தையார் *மாத்ரு தத்தன்.* திரூரை அடுத்துள்ள திருக்கண்டியூரில் அச்சுத மிஷாரோடிக்குச் சீடராகிச் சமஸ்கிருதம் பயின்றார். பின்பு வாதநோய் பற்றிக்கொள்ளவே குருவாயூருக்குச் சென்று அப்பனின் திருச் சன்னிதியில் அமர்ந்து *ஸ்ரீ நாராயணீயம்* என்ற சிறந்த நூலை எழுதி உலகுக்கு அளித்தார். வாதநோய் நீங்கிற்று. பாகவதத்தின் 18000 சுலோகங்களை 1034 சுலோகங்களாக மாற்றி நூறு தசகங்களாக வெளியிட்டார். ஒவ்வொரு நிகழ்ச்சியையும் "இப்படித்தானா?" என்று குருவாயூரப்பனிடம் இவர் கேட்கும்போது அவர் "ஆமாம் ஆமாம்" என்று தலையசைத்து ஆமோதிப்பது உண்டாம். நரசிம்மாவதாரத்தை வருணிப்பது பற்றி யோசித்தபோது வாதி மாடத்திலுள்ள தூண் ஒன்றிலிருந்து *ஸ்ரீ நரசிம்மசுவாமி* வெளிவந்து நடந்து காட்டினாராம். கண்ட காட்சியை இவர் அப்படியே எழுதி முடித்தார். இராமாவதாரத்தில் *சீதை* அளித்த சூளாமணியை அனுமார் ராமனிடம் தரும் கட்டத்தில் 'சூளாமணியைக் கொடுத்தார்' என்று மட்டும் எழுதினார். யாருக்கு? இராமனுக்கு என்று எழுதினால் சந்தம் சரிவராது என்று நினைத்துக் கொண்டிருக்கும்போது குருவாயூரப்பன் தன் கையை நீட்டி 'சூளாமணியை என்னிடம்தான் கொடுத்தார் அனுமார்' என்றாராம். உடனே பட்டதிரி 'உனக்கு' என்று எழுதி அந்தச் சுலோகத்தை முடித்துவிட்டார். கார்த்திகை மாதம் 28-ந் தேதி நாராயணீயத்தைப் பூர்த்தி செய்து சமர்ப்பித்தார். அந்த நாள் *நாராயணீய தினமாகக்* குருவாயூரில் கொண்டாடப்படுகிறது. பண்டிதர்களைக் கொண்டு நாராயணீயத்தைப் பாராயணம் செய்வது வழிபாடுகளில் ஒன்றாகும்.

அவர் காலத்தில் ***பூந்தானம்*** என்ற மற்றொரு கவியும் வாழ்ந்துவந்தார். அவரும் குருவாயூரப்பனின் மேலான பக்தர். அவரும் ஒரு நம்பூதிரிதான். *ஞானப்பானை, சந்தான கோபாலம் பானை (குமார ஹரணம்)* மலையாளத்தில் *கிருஷ்ண கர்ணாம்ருதம்* போன்ற நூல்களை இயற்றி இருக்கிறார். ஒருநாள் *கோழிக்கோடு சாமூதிரி* அரசனிடம் சன்மானமாகப் பெற்ற பொருள்களுடன் பூந்தானம் தனியாகக் குருவாயூருக்கு வந்து கொண்டிருக்கும்போது திருடர்கள் பின் தொடர்ந்து வருவதை அறிந்து குருவாயூரப்பனை மனத்தில் தியானித்துக் கொண்டே வந்தார். அப்போது சில ராணுவ வீரர்களுடன் சாமூதிரியின் தளபதியான

*மாங்காட்டச்சன்* என்பவர் வந்து திருடர்களை அடித்துத் துரத்திவிட்டு அவரைக் காப்பாற்றினார்.பூந்தானம் தன் மோதிரத்தை அவருக்குப் பரிசாக அளித்தார். மறுநாள் அதிகாலை குருவாயூரப்பன் மேல்சாந்தியின் கனவில் வந்து "என் விரலில் இருக்கும் புதிய மோதிரத்தைக் கழற்றி, பூந்தானத்திடம் கொடுத்துவிடு; அது அவருடையது" என்று கூறவும் மேல்சாந்தி அவ்வாறே செய்தாராம்.பூந்தானம் 91 வயதுவரை வாழ்ந்தார். இறுதி நாளில் கிருஷ்ணபரமாத்மா அவருக்காக எடுத்து வந்த புஷ்பக விமானத்தில் அமர்ந்து கொண்டு வைகுண்ட யாத்திரை செய்தார். அவர் பிறந்து வளர்ந்தது வலம்பூர் வட்டத்திலுள்ள *இடத்துப்புறம்* என்ற கிராமம், அவர் வைகுண்ட யாத்திரை மேற்கொண்ட இடம் *பூந்தானம்இல்லம்* என்ற பெயரில் *கீழ்ஆத்தூர்* என்ற இடத்தில் உள்ளது.

*குரூர்அம்மா* புரையனூர் மனையைச் சேர்ந்தவர். குருவாயூருக்கு அருகிலுள்ள *அடாட்டுகுரூர்* மனையில் திருமணம் செய்து கொண்டார். அங்கு வந்தது முதல் *குரூர்அம்மா* என்று பெயர் பெற்றார். குட்டிக்கிருஷ்ணன் அந்த வீட்டில் பல விளையாட்டுக்களைச் செய்தான். அக்காலத்தில் நடுவில்மடத்தைச் சேர்ந்த *வில்வமங்கள சுவாமியாரும்* வாழ்ந்து வந்தார். சுவாமியார் குரூர்மனைக்கு வந்தபோது குரூர்அம்மா பூஜையில் இருந்தார். அவருக்கு அருகில் கிருஷ்ணன், பிரம்மச்சாரி சிறுவனாக வந்து குற்றேவல் செய்து கொண்டிருந்தான். பிட்சைக்கான சடங்குகளை அந்தச் சிறுவனே கவனித்துக் கொண்டிருந்தபோது சுவாமியார், "இந்தச் சடங்குகளைச் செய்ய இங்கே ஒரு கிரஹஸ்தர்இல்லையா?" என்று கோபத்துடன் கேட்டார்.அச்சிறுவன் சிரித்துவிட்டு ஆதிசங்கரர்"த்ரியோகி கிரஹஸ்தாய விஷ்யோர் நமஸ்தே" என்று சொல்லியிருப்பது உங்களுக்குத் தெரியாதா?என்றுகேட்டான். மூன்று உலகங்களுக்கும் கிரகஹஸ்தனான குருவா யூரப்பனே இந்தக் கேள்வியைக் கேட்டார் என்று புரிந்து கொண்டார் சுவாமியார்.

குருவாயூர் ஆலயத்தில் ஒரு நம்பூதிரி வயிற்றுவலியால் அவதியுற்று அப்பனிடம் முறையிட்டுக் கொண்டிருந்தார். வில்வமங்களம் சுவாமியார் குருவாயூரப்பனிடம் இதைப் பற்றி முறையிட்டார். இன்னும் 4 ஜென்மங்கள் இந்த வலியை அனுபவிக்க வேண்டும் என்று குருவாயூரப்பன் கூறினார். பின்னர் நம்பூதிரி குரூர் மனைக்கு வந்து அம்மாவிடம் கதறினார். *நாராயணா* என்று அவன் நாமத்தைச் சொல்லியழுதால் நோய் தீரும் என்று குரூர்அம்மா கூறினார். அவ்வாறே நாமசங்கீர்த்தனம் செய்து நோயைக் குணப்படுத்திக் கொண்டார் நம்பூதிரி.குருவாயூரிலிருந்து திருச்சூர் செல்லும் சாலையில் சுமார் 20 கி.மீ. தூரத்தில் *அடாட்டு* என்னும் ஊரில் குரூர் அம்மா வாழ்ந்த வீடு உள்ளது.

*திரு. அ.கண்ணப்பன் அவர்களின் நூல்களில் சில:*

1. திருவரங்க மாலை
2. திருப்பதி மாலை
3. குருவாயூரப்பன் மாலை
4. அழகர்கோயில் சுந்தரராஜப்பெருமாள் மாலை
5. திருவாரூர் புலிவலம் வெங்கடாசலபதி பதிகம்
6. திருக்கண்ணபுரம் சௌரிராஜப்பெருமாள் மாலை
7. குணசீலம் பிரசன்னவெங்கடேசப்பெருமாள் பதிகம்
8. கரூர் தாந்தோணிமலை கலியாணவேங்கடரமணசுவாமி பதிகம்
9. திருக்கண்ணமங்கை பக்தவத்ஸலப்பெருமாள் பதிகம்
10. உப்பிலியப்பன் கோயில் வெங்கடாசலபதி பதிகம்
11. நாமக்கல் லட்சுமி நரசிம்மர் பதிகம்
12. திருவாரூர் பாலஆஞ்சநேயர் பதிகம்
13. சிக்கல் ஆஞ்சநேயர் மாலை
14. அனந்தமங்கலம் திரிநேத்திர தசபுஜ வீர ஆஞ்சநேயர் மாலை
15. பிட்சாண்டார் கோயில் வீர ஆஞ்சநேயர் மாலை
16. தருமபுரி தாச ஆஞ்சநேயர் மாலை
17. நாமக்கல் ஆஞ்சநேயர் பதிகம்
18. சென்னை பெசண்ட்நகர் அஷ்ட லட்சுமி மாலை
19. மந்திராலயம் ராகவேந்திரர் விருத்தமாலை
20. நடனகோபால நாயகி சுவாமிகள் மாலை

